7th March 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : மூடப் பழக்கம் என்று சொன்னது பின்னங்களை படிப்பதற்கு இல்லை. அந்தக் காலத்திலே பின்னம் தெரியாமல் இருந்தால் அப்போது இருக்கக்கூடிய நிலைமைக்குச் சரியாக இருக்காது. அந்த நிலை மாறி மறைந்த பிற்பாடு இப்போது தமிழ் எண்கள் வரவேண்டுமென்று சொல்வதுதான் மூடப்பழக்கம். மூடப்பழக்கம் என்பது காலத்தை அனுசரித்தது. ஒரு காலத்தில் அவசியமாயிருந்தது பிற்காலத்தில் மூடப் பழக்கமாக ஆகிறது.

### *Caste certificates*

* 238 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the persons from whom the Harijan students studying in schools should obtain Caste Certificate; and

(*b*) the person from whom the Harijans applying for posts in State Government Departments should obtain such certificate?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The Harijan students studying in schools should obtain Caste Certificates from any one of the following Non-officials :—

1. Presidents of the District Boards.
2. Chairmen, Municipal Councils.
3. President of Class I Panchayat Boards.
4. Honorary Magistrates.
5. M.Ps. belonging to this State.
6. M.L.As. and M.L.Cs.

(*b*) An Officer of the Revenue Department not lower in rank than a Tahsildar or an Independent Deputy Tahsildar.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister whether all Adi-Dravidas get these concessions whether they call themselves Harijans or otherwise? For, *Sambans*, although they are Adi-Dravidas, they are describing themselves as Parayas and therefore, they are not getting educational concessions and certificates are not issued to them. Will Government look into the matter and issue necessary orders to the Director of Public Instruction and other authorities to recognize Parayas also as Harijans?

MR. SPEAKER : This question does not arise from the main question. This relates to authorities who will issue the certificates.

SRI P. G. MANICKAM : ஸார், என்னால் கேட்கப்பட்ட இந்தக் கேள்வியின் இரண்டாவது பிரிவுக்குப் பதில் கொடுக்கவில்லை. ராஜ்ய அரசாங்க இலாக்காக்களில் உத்தியோகங்களுக்கு விண்ணப்பித்துக்கொள்கிற ஹரிஜனங்கள் அந்த ஸர்டிபிகேட்டை யாரிடம் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று மந்திரி அவர்கள் சொல்லுவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நான் பதில் சொல்லியிருக்கிறேன். ரெவின்யூ டிபார்ட்மென்டில் தாசில்தார் ரேங்குக்குக் குறையாமல், அல்லது இண்டிபெண்டெண்ட் டெபுடி தாசில்தார் அவர்களிடத்தில் அத்தாட்சிப் பத்திரம் வாங்கவேண்டும்.

[7th March 1958

SRI M. JAGANNATHAN : தலைவர் அவர்களே, ஜாதி ஸர்டிபிகேட்டெல்லாம் கெஜெட் பதிவு உத்தியோகஸ்தர்களிடம் வாங்கவேண்டுமென்ற விதி இருக்கின்ற காரணத்தால் ஏழை ஹரிஜன மாணவர்கள் ஸர்டிபிகேட் வாங்க கஷ்டப்படுகிறார்கள். சட்டசபைப் பிரதிநிதிகளிடமிருந்தும், முனிஸிபல் கவுன்சிலர்களிடமிருந்தும் இந்த ஸர்டிபிகேட் வாங்குவதை அனுமதிக்க ஏற்பாடு செய்ய சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நான் கொடுத்த ஆன்ஸரிலே எம்.எல்.ஏ., எம்.எல்.ஸி., எம்.பி. கூட ஸர்டிபிகேட் கொடுக்கலாம் என்று சொல்லியிருக்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் அமைச்சர் அவர்கள் எம்.எல்.ஏ. ஸர்டிபிகேட் கொடுக்கலாம் என்று சொன்னார்கள். அதாவது அந்த ஜூரிஸ்டிக்ஷன் எம்.எல்.ஏக்களிடம்தான் வாங்கவேண்டுமா ? அந்த தொகுதியைச் சேர்ந்த அங்கத்தினரிடம்தான் வாங்கவேண்டுமென் பதில் பல சங்கடங்கள் வருகின்றன. எதிர் கட்சி அங்கத்தினருடைய தொகுதியைச் சேர்ந்தவர்கள் அந்த அங்கத்தினர்களிடம் ஸர்டிபிகேட் வாங்க முடியாமல் எங்களிடம் வந்து சேருகிறார்கள். அதனால் மிகவும் சங்கடம் உண்டாகின்றது. ஆதலால் ஜூரிஸ்டிக்ஷன் எம்.எல்.ஏ. என்று இல்லாமல் எந்த எம்.எல்.ஏ.யாக இருந்தாலும் ஸர்டிபிகேட் கொடுக்கலாம் என்று அரசாங்கம் அனுமதிக்குமா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: அந்தந்த வட்டார அங்கத்தினர்களுக்குத் தான் அந்தந்த நிலைமை தெரியும். அதனால்தான் அந்தந்த வட்டார அங்கத்தினர்கள் கொடுக்க வேண்டுமென்று வைத்திருக்கிறோம்.

SRI A. GOVINDASAMY : ஹரிஜன்ஸ் என்று ஸர்டிபிகேட்டில் எழுதிவிட்டாலும் ஆதித்திராவிடர்கள் என்று ஸர்டிபிகேட் கொண்டுவந்தால்தான் ஏற்றுக் கொள்வேன் என்று அதிகாரிகள் சொல்லுகிறார்கள். ஆதித்திராவிடர்கள் என்றாலும், ஹரிஜனங்கள் என்றாலும் ஒன்றுதான். ஆகவே, சர்க்கார் ஒரு அறிக்கையை விட்டு அந்தமாதிரி இருந்தாலும் ஸர்டிபிகேட்டுகளை ஏற்றுக்கொள்ளும்படி அறிவிப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் ஒரு தனிக் கேள்வி போட்டால் அதற்கு பதில் சொல்லுகிறேன்.

SRI P. G. MANICKAM : ஸார், ஹரிஜனங்கள் வேலை சம்பாதிக்க, தொழிற் கல்வி பயில ஜாதி ஸர்டிபிகேட் வாங்கவேண்டுமானால் ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம் அல்லது கெஜடெட் ஆபீசரிடம் வாங்கவேண்டியிருக்கிறது. இதனால் ஹரிஜனங்களுக்கு ஹிம்சையாக இருக்கின்றது. ஆகவே முன் சொன்ன பிரகாரம் ஸ்தல எம்.எல்.ஏக்கள், ஸ்தல முனிஸிபல் கவுன்ஸிலர்கள், பஞ்சாயத்து போர்டு அங்கத்தினர்கள் இவர்களிடம் வாங்கலாம் என்று சட்டத்தை திருத்தப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் ஒரு தனிக் கேள்வி போட்டால் பார்த்து பதில் சொல்லுகிறேன்.

SRI K. B. S. MANI : ஸார் இப்போது கவர்ன்மென்ட் உத்தியோகத்திற்கு மனு செய்து கொள்ளக் கூடிய ஹரிஜனங்கள் தனிப்பட்ட தாசில்தாரிடம் ஸர்டிபிகேட் வாங்கவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இப்போது வெளியாகிய ஒரு எலெக்டிரிசிடி போர்ட் நோட்டிபிகேஷனில் '' எனி அதர் பர்ஸன் '' என்று போட்டிருக்கிறார்கள். இந்த '' எனி அதர் பர்ஸன் '' யார் கையெழுத்திட்டால் தாசில்தாருக்குச் சமமாக பாவிக்கப்படுமென்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : '' எனி அதர் பர்ஸன் '' என்பது இண்டிபென்டெண்ட் டெபுடி தாசில்தாரைத்தான் குறிக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.